வந்திருக்க வேண்டுமென ஊகித்துக் கொண்டேன். அங்ஙனம் கொண்டு வந்தோரில் ஒருவன் வேணு முதலி போலே பொய்க் குரல் காட்டி என்னை வஞ்சனை செய்து விட்டானென்பதையும் உணர்ந்து கொண்டேன்.

ஆதலால், மிகுந்த கோபத்துடன் நான் பொன்னுசனத்தில் வீற்றிருந்த பண்டாரத்தை நோக்கி, ''யாரடா நீ! என்னை ஏன் இந்த நின் சேவகர் மூலமாக இங்கு கொணர்வித்தாய்?'' என்று கேட்டேன். அப்போது அந்த சந்நியாஸி ''பாரடா!'' என்று சொல் லித் திரும்பி வட திசையைக் காட்டினான். அவன் கிழக்கைப் பார்க்க உட்கார்ந்திருந்தான். அந்த ராத்திரியில் உனக்குத் திசை எப்படித் தெரிந்ததென்று கேட்பீர்களே! அந்தப் பண்டாரஞ் சொன்னான்: ''வடதிசையைப் பார்! அங்கே எரிகின்ற சிதைகளைக் கண்டாயா?'' என்றான். அங்கு பார்த்தேன். முப்பது நாற்பது பிணங்கள் வரிசை யாக அடுக்கி எரிந்து கொண்டிருந்தன. பாதி ராத்திரியில் அந்தப் பண்டாரங்களின் கூட்டத்தைப் பார்க்கும்போதே எனக்குப் பயமாக இருந்தது. அந்த இரவிலே இந்த முப்பது நாற்பது பிணங்கள் எரி வதையும் சேர்த்துக் காட்டினபோது நான் பயந்து நடுங்கிப் போ னேன். அந்தப் பண்டாரம் கொல்லென்று சிரித்தான்.

உடனே அந்த நூறு தீவட்டிகள் கொண்டிருந்த நூறு கன்னிப் பெண்களும் பாடத் தொடங்கினார்கள். தேவகானம் அமிர்த வரு ஷம். இன்னிசைக்கடல். இன்பக் காட்டுத் தீ—அந்த மாதிரிப் பாட்டு நான் கேட்டதே கிடையாது. அவர்கள் பாடிய பாட்டு திருவாசகம்.

நெறியல்லா நெறிதன்னை
 நெறியாக நினை வேனைச்
சிறு நெறிகள் சேராமே
 திருவருளே சேரும் வண்ணம்
குறி யொன்று மில்லாத
 கூத்தன் தன் கூத்தை யெனக்
கறியும் வண்ண மருளிய வா
 ருர் பெறுவாரச்சோ வே!

* * * *

ஆர் பெறுவார் அச்சோவே!
அறியும் வண்ணம் அருளிய ஆறு
ஆர் பெறுவார், அச்சோ! ஏ!
அறியும் வண்ணம் அருளிய ஆறு
ஆர் பெறுவார் அச்சோ! ஏ!

பண்ணுவார்களோ, என்னவோ! ஏனடா, நம்மை அப்படிச் செய்கிறான்? நம்மை யாரும் ஒன்றுமே செய்ய மாட்டார்கள். நாம் எவனுக்காவது தீங்கு நினைத்தாலன்றோ, நமக்கொருவன் தீங்கு நினைப்பான் நாம் சும்மா இருக்கும்போது நமக்கேன் பிறர் தீங்கு செய்கின்றார்கள்? அது நடக்காது. நம்மை அநுவசியமாக ஹிம்சிக்க மாட்டார்கள்...பின் எதற்காகத்தான் கொண்டு போகிறார்கள்? அதிலும் இப்படி அப்ராக்கிருதமான அவஸ்தைக் குட்படுத்தி நம்மைக் கொண்டு போவார் ஹிம்சைக்கில்லாமல் ஸிமந்தகலியாணத்துக்கா இப்படி அழைத்துக் கொண்டு போவார்கள்?'' என்று பலவிதமாக எண்ணினேன். அப்போது திடீரென்று வண்டி நின்றது.

## பேய்க் கூட்டம்

### II

[பூர்வ கதை: பாதியிரவில் என் வீட்டுக் கதவை யாரோ இடி இடியென்றிடிக்க நான் யாரென்று கேட்க, வேணு முதலியும் சில நண்பர்களும் என்று எதிர் உத்தரம் வர நான் கீழே போய்க் கதவைத் திறக்க, அப்போது அங்கு வந்திருந்தோரை நான் பார்க்கு முன்னாகவே, அவர்கள் பளிச்சென்று என் கண்களைக் கட்டிக் குதிரை வண்டியில் போட்டுக் கொண்டு செல்ல, நெடுந்தூரம் போன பின்பு குதிரை வண்டி சடேரென்று நின்றது.]

மேலே கதை சொல்லுகிறேன். ஆச்சரியமான கதை: ஜாக்கிரதையுடன் கேளுங்கள்.

என்னை ஒருவன் வந்து பந்தைத் தூக்குவது போலே கையில் தூக்கிக் கொண்டான். தெய்வ கிருபையால் அவர்கள் என் செவியைக் கட்டவில்லை. சத்தங்கள் செவிப்பட்டன. குதிரையை வண்டியிலிருந்து அவிழ்த்து சமீபத்தில் கொண்டு கட்டினார்கள் என்று சில ஒலிக் குறிப்புகளாலே தெரிந்து கொண்டேன். என்னைத் தூக்கிக் கொண்டு போய்க் கண்ணை அவிழ்த்தபோது பார்க்கிறேன். சுமார் நூறு தீவட்டிகள் கைக் கொண்டு சுமார் நூறு கன்னிப் பெண்கள் வரிசையாக நிற்கிறார்கள். எதிரே ஒரு பொன்னாசனம் போட்டிருந்தது. அதன் மேலே கந்தை யுடுத்துக் கருந்துணி போர்த்துத் தலை மொட்டையாய், முகம் நரைத்தும், புகையிலைச் சுருட்டுப் பிடித்துக் கொண்டு ஒரு பரதேசி உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றி அநேகம் சாமியார்கள் நின்றிருக்கிறார்கள். கையை உயரத் தூக்கி அப்படியே பல வருஷம் வைத்துக் கொண்டிருந்தபடியால், கை மரம் போல் அசைக்க முடியாமல் போன ஸந்நியாசிகளும், காவி யுடுத்தவர்களும், கந்தை தரித்தவரும், சடை நீட்டினவரும், மொட்டையடித்தவரும், நிர்வாண ரூபமாக நிற்போரும் இங்ஙனம் பலபல வகைகளில் சுமார் முப்பது சந்நியாஸிகள் இருந்தார்கள். வேணு முதலியைக் காணவில்லை. என்னை இவர்களில் சிலர் தான் தூக்கிக் கொண்டு

வந்திருக்க வேண்டுமென ஊகித்துக் கொண்டேன். அங்ஙனம் கொண்டு வந்தோரில் ஒருவன் வேணு முதலி போலே பொய்க் குரல் காட்டி என்னை வஞ்சனை செய்துவிட்டானென்பதையும் உணர்ந்து கொண்டேன்.

ஆதலால், மிகுந்த கோபத்துடன் நான் பொன்னுசனத்தில் வீற்றிருந்த பண்டாரத்தை நோக்கி, ''யாரடா நீ! என்னை ஏன் இந்த நின் சேவகர் மூலமாக இங்கு கொணர்வித்தாய்?'' என்று கேட்டேன். அப்போது அந்த சந்நியாஸி ''பாரடா!'' என்று சொல்லித் திரும்பி வட திசையைக் காட்டினன். அவன் கிழக்கைப் பார்க்க உட்கார்ந்திருந்தான். அந்த ராத்திரியில் உனக்குத் திசை எப்படித் தெரிந்ததென்று கேட்பீர்களே! அந்தப் பண்டாரஞ் சொன்னன்: ''வடதிசையைப் பார்! அங்கே எரிகின்ற சிதைகளைக் கண்டாயா?'' என்றுன். அங்கு பார்த்தேன். முப்பது நாற்பது பிணங்கள் வரிசையாக அடுக்கி எரிந்து கொண்டிருந்தன. பாதி ராத்திரியில் அந்தப் பண்டாரங்களின் கூட்டத்தைப் பார்க்கும்போதே எனக்குப் பயமாக இருந்தது. அந்த இரவிலே இந்த முப்பது நாற்பது பிணங்கள் எரிவதையும் சேர்த்துக் காட்டினபோது நான் பயந்து நடுங்கிப் போனேன். அந்தப் பண்டாரம் கொல்லென்று சிரித்தான்.

உடனே அந்த நூறு திவட்டிகள் கொண்டிருந்த நூறு கன்னிப் பெண்களும் பாடத் தொடங்கினார்கள். தேவகானம் அமிர்த வருஷம். இன்னிசைக்கடல். இன்பக் காட்டுத் தீ—அந்த மாதிரிப் பாட்டு நான் கேட்டதே கிடையாது. அவர்கள் பாடிய பாட்டு திருவாசகம்.

நெறியல்லா நெறிதன்னை
    நெறியாக நினைவேனைச்
சிறு நெறிகள் சேராமே
    திருவருளே சேரும் வண்ணம்
குறி யொன்று மில்லாத
    கூத்தன் தன் கூத்தை யெனக்
கறியும் வண்ண மருளிய வா
    ரூர் பெறுவாரச்சோ வே!

* * * *

ஆர் பெறுவார் அச்சோவே!
அறியும் வண்ணம் அருளிய ஆறு
ஆர் பெறுவார், அச்சோ! ஏ!
அறியும் வண்ணம் அருளிய ஆறு
ஆர் பெறுவார் அச்சோ! ஏ!

பண்ணுவார்களோ, என்னவோ! ஏனடா, நம்மை அப்படிச் செய்கிறான்? நம்மை யாரும் ஒன்றுமே செய்ய மாட்டார்கள். நாம் எவனுக்காவது தீங்கு நினைத்தாலன்றோ, நமக்கொருவன் தீங்கு நினைப்பான் நாம் சும்மா இருக்கும்போது நமக்கேன் பிறர் தீங்கு செய்கின்றார்கள்? அது நடக்காது. நம்மை அனாவசியமாக ஹிம்சிக்க மாட்டார்கள்...பின் எதற்காகத்தான் கொண்டு போகிறார்கள்? அதிலும் இப்படி அப்ராக்கிருதமான அவஸ்தைக் குட்படுத்தி நம்மைக் கொண்டு போவார் ஹிம்சைக்கில்லாமல் ஸிமந்தகலியாணத்துக்கா இப்படி அழைத்துக் கொண்டு போவார்கள்?'' என்று பலவிதமாக எண்ணினேன். அப்போது திடீரென்று வண்டி நின்றது.

## பேய்க் கூட்டம்

### II

[பூர்வ கதை: பாதியிரவில் என் வீட்டுக் கதவை யாரோ இடி இடியென் றிடிக்க நான் யாரென்று கேட்க, வேணு முதலியும் சில நண்பர்களும் என்று எதிர் உத்தரம் வர நான் கீழே போய்க் கதவைத் திறக்க, அப்போது அங்கு வந்திருந்தோரை நான் பார்க்கு முன்னாகவே, அவர்கள் பளிச்சென்று என் கண்களைக் கட்டிக் குதிரை வண்டியில் போட்டுக் கொண்டு செல்ல, நெடுந்தூரம் போன பின்பு குதிரை வண்டி சடேரென்று நின்றது.]

மேலே கதை சொல்லுகிறேன். ஆச்சரியமான கதை: ஜாக்கிரதையுடன் கேளுங்கள்.

என்னை ஒருவன் வந்து பந்தைத் தூக்குவது போலே கையில் தூக்கிக் கொண்டான். தெய்வ கிருபையால் அவர்கள் என் செவியைக் கட்டவில்லை. சத்தங்கள் செவிப்பட்டன. குதிரையை வண்டியிலிருந்து அவிழ்த்து சமீபத்தில் கொண்டு கட்டினார்கள் என்று சில ஒலிக் குறிப்புகளாலே தெரிந்து கொண்டேன். என்னைத் தூக்கிக் கொண்டு போய்க் கண்ணை அவிழ்த்தபோது பார்க்கிறேன். சுமார் நூறு தீவட்டிகள் கைக் கொண்டு சுமார் நூறு கன்னிப் பெண்கள் வரிசையாக நிற்கிறார்கள். எதிரே ஒரு பொன்னாசனம் போட்டிருந்தது. அதன் மேலே கந்தை யுடுத்துக் கருந்துணி போர்த்துத் தலை மொட்டையாய், முகம் நரைத்தும், புகையிலைச் சுருட்டுப் பிடித்துக் கொண்டு ஒரு பரதேசி உட்கார்ந்திருந்தார். அவரைச் சுற்றி அநேகம் சாமியார்கள் நின்றிருக்கிறார்கள். கையை உயரத் தூக்கி அப்படியே பல வருஷம் வைத்துக் கொண்டிருந்தபடியால், கை மரம் போல் அசைக்க முடியாமல் போன ஸந்நியாசிகளும், காவி யுடுத்தவர்களும், கந்தை தரித்தவரும், சடை நீட்டினவரும், மொட்டையடித்தவரும், நிர்வாண ரூபமாக நிற்போரும் இங்ஙனம் பலபல வகைகளில் சுமார் முப்பது சந்நியாஸிகள் இருந்தார்கள். வேணு முதலியைக் காணவில்லை. என்னை இவர்களில் சிலர் தான் தூக்கிக் கொண்டு

வந்திருக்க வேண்டுமென ஊகித்துக் கொண்டேன். அங்ஙனம் கொண்டு வந்தோரில் ஒருவன் வேணு முதலி போலே பொய்க் குரல் காட்டி என்னை வஞ்சனை செய்து விட்டானென்பதையும் உணர்ந்து கொண்டேன்.

ஆதலால், மிகுந்த கோபத்துடன் நான் பொன்னுசனத்தில் வீற்றிருந்த பண்டாரத்தை நோக்கி, ''யாரடா நீ! என்னை ஏன் இந்த நின் சேவகர் மூலமாக இங்கு கொணர்வித்தாய்?'' என்று கேட்டேன். அப்போது அந்த சந்நியாஸி ''பாரடா!'' என்று சொல்லித் திரும்பி வட திசையைக் காட்டினுன். அவன் கிழக்கைப் பார்க்க உட்கார்ந்திருந்தான். அந்த ராத்திரியில் உனக்குத் திசை எப்படித் தெரிந்ததென்று கேட்பீர்களே! அந்தப் பண்டாரஞ் சொன்னுன்: ''வட திசையைப் பார்! அங்கே எரிகின்ற சிதைகளைக் கண்டாயா?'' என்ருன். அங்கு பார்த்தேன். முப்பது நாற்பது பிணங்கள் வரிசையாக அடுக்கி எரிந்து கொண்டிருந்தன. பாதி ராத்திரியில் அந்தப் பண்டாரங்களின் கூட்டத்தைப் பார்க்கும்போதே எனக்குப் பயமாக இருந்தது. அந்த இரவிலே இந்த முப்பது நாற்பது பிணங்கள் எரிவதையும் சேர்த்துக் காட்டினபோது நான் பயந்து நடுங்கிப் போனேன். அந்தப் பண்டாரம் கொல்லென்று சிரித்தான்.

உடனே அந்த நூறு திவட்டிகள் கொண்டிருந்த நூறு கன்னிப் பெண்களும் பாடத் தொடங்கினுர்கள். தேவகானம் அமிர்த வருஷம். இன்னிசைக்கடல். இன்பக் காட்டுத் தீ—அந்த மாதிரிப் பாட்டு நான் கேட்டதே கிடையாது. அவர்கள் பாடிய பாட்டு திருவாசகம்.

நெறியல்லா நெறிதன்னை
நெறியாக நினை வேனைச்
சிறு நெறிகள் சேராமே
திருவருளே சேரும் வண்ணம்
குறி யொன்று மில்லாத
கூத்தன் தன் கூத்தை யெனக்
கறியும் வண்ண மருளிய வா
ரூர் பெறுவாரச்சோ வே!

* * * *

ஆர் பெறுவார் அச்சோவே!
அறியும் வண்ணம் அருளிய ஆறு
ஆர் பெறுவார், அச்சோ! ஏ!
அறியும் வண்ணம் அருளிய ஆறு
ஆர் பெறுவார் அச்சோ! ஏ!

இந்த வரியைப் பல்லவியாகப் பாடிக் கொண்டு அந்த நூறு பெண்களும் குதிக்கத் தொடங்கினார்கள். பாட்டைத் தேவகான மென்றேன். இந்தக் கூத்தை யெங்ஙனம் வர்ணிப்பேன்! சக்தி நாடகம்—விஷ்ணுவின் சித்தலோகம். கண்ணான் கண்ட கனா.

சிறிது நேரத்துக்கெல்லாம் கூத்து முடிந்தது. பெண்கள் மறைந்து விட்டனர்.

திவட்டி யொளி குறைந்தது. நாலு திவட்டிகள் மிஞ்சின. அவற்றை நான்கு வலக்கை தூக்கிப் பரதேசிகள் இடக்கையிலே தூக்கி நின்றனர்.

பண்டாரம் சொல்லுகிறான்! எந்தப் பண்டாரம் சொல்லுகிறான்! பொன்னாசனத்தின்மீது வீற்றிருந்த தலைப் பண்டாரம் சொல்கிறான்:

''வாப்பா, காளிதாஸா, பயப்படாதே. தரையின் மேல் உட்கார்ந்து கொள். மனதைக் கட்டு. மூச்சை நேராக்கு. ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. நீ செய்த நூல்கள் சில நாம் பார்த்திருக்கிறோம். 'கடலெதிர்த்து வந்தால் கலங்க மாட்டோம். தலைமேல் இடி விழுந்தால் தளரமாட்டோம்; எங்கும் அஞ்சோம்; யார்க்கு மஞ்சோம்; எதற்கு மஞ்சோம்; எப்போதும் அஞ்சோம்' என்று நீ பாடினதை நான் நேற்று ஒரு புஸ்தகத்தில் பார்த்தேன். நீ உண்மையான அனுபவத்தைச் சொன்னாயா, அல்லது வெறுங் கற்பனைதானா என்பதை அறியும் பொருட்டாக நான் உன்னை இங்கே தொணர்வித்தேன். நீ பயப்படுகிற அளவு ஆற்காட் நவாப் கூட பயந்தது கிடையாது. ஆற்காட் நவாப் சங்கதி தெரியுமா? கிளைவ் ஒரு வாயில் வழியே கோட்டைக்குள் புகுந்து பார்த்தபோது நவாப் மற்றொரு வாயில் வழியே வெளியேறி விட்டாராம். உள்ளே போனால் கிளைவ் யாருடன் சண்டை போடுவார்? அவர் பாட்டிலே போய் ஷோக்காகக் கோட்டைக்குள் பீரங்கி சகிதமாக இருந்து கொண்டு கோட்டை கொத்தளங்களைச் சிராக்கித் தான் அதை வைத்துக் கொண்டாரென்று கேள்வியுற்றதுண்டு. நீ அந்த ஆற்காடு நவாபினிடமிருந்த பிராமணச் சோதிடரின் வம்சத்தில் பிறந்தாயோ? ஆற்காட்டு பயம் பயப்படுகிறாயே! மூடா, ஆறுதலடை.''

அந்தப் பரதேசி பின்னும் சொல்லுகிறான்: ''மனுஷ்ய வாழ்க்கை சதமில்லை. பிறப்பை உடனே ஒழி. மண்ணில் பிறக்காதே. வானத்தில் ஏறு. சந்திர கலைகளில் உண்டாகும் அமிர்தத்தைப் பானஞ் செய்யும் யோகி ஒருவன் தான் உன்பாட்டில் கண்டபடி பயப்படாமலிருக்க முடியும். அதை விட்டு நமக்குத் தான் அகல வெழுதத்தெரியுமென்று நீ கிறுக்கித் தள்ளி விட்டாய். குண்டலினி அக்கினியைத் தலைக்குக் கொண்டு போ. அப்போது அமிர்த கலசமொழுகும், அந்த அக்கினியும் அமிர்தமும் ஒன்றாய் இன்ப வெள்ளத்திலே நீந்தலாம். இன்பமிருந்தால் பயமில்லை. இன்பமில்லாத போது பயம் இயற்கையிலே வரும். இருவினைக் கட்டை அறு. நன்மை தீமையென்ற குப்பையைத் தொலைவிலே தள்ளு. எல்லாம் சிவம் என்றறி. உன்னை

வெட்டவரும் வாளும் சிவன். அதைக் கும்பிடு. உன்னை அது வெட்டாது. சரணாகதிதான் வழி. பொய் பேசாதே. தீங்கு கருதாதே. பேய்க்குத் தீங்கு செய்யாதே. பகைவனுக்குத் தீமை நினைக்காதே. பகைவனையும் சிவனென்று கும்பிடு. பாம்பின் வாய்க்குள்ளே போய் விரலை விட்டு ஓம் சிவாய நம என்று சொல். உன்னைக் கடிக்காது.''

தலைமைப் பண்டாரம் பொன்னாசனத்தினின்றும் எழுந்து நின்றான். அப்போது அங்கே ஒரு சங்கொலிப் பண்டாரம் 'பம்'பம்' 'பம்' என்று சங்கெடுத்து ஊதினான். மற்றொரு சடைப் பண்டாரம் கண, கண, கணவென்று மணி யடித்தான். பிறகு பண்டாரங்கள் அத்தனை பேரும் சேர்ந்து பின்வரும் பாட்டைப் பாடினார்கள்.

''வையகத்தே சடவஸ்து வில்லை,
மண்ணும் கல்லும் சடமில்லை,
மெய்யுரைப்பேன் பேய் மனமே
மேலுங் கீழும் பயமில்லை !— 1

பையப் பையத் தேரடா!
படையும் விஷமுங் கடவுளடா!
பொய்யு மெய்யுஞ் சிவனடா!
பூமண்டலத்தே பயமில்லை! 2

சாவு நோவுஞ் சிவனடா!
சண்டையும் வாளுஞ் சிவனடா!
பாவியு மேழையும் பாம்பும் பசுவும்
பண்ணுந் தானமுந் தெய்வமடா! 3

எங்குஞ் சிவனைக் காணடா!
ஈன பயத்தைத் துரத்தடா!
கங்கைச் சடையா, காலன் கூற்றே
காமன் பகையே வாழ்க நீ !— 4

பாழுந் தெய்வம் பதியுந் தெய்வம்
பாலை வனமுங் கடலுந் தெய்வம்
ஏழு புலியும் தெய்வம் தெய்வம்
எங்குந் தெய்வம் எதுவுந் தெய்வம் 5

இந்த வரியைப் பல்லவியாகப் பாடிக் கொண்டு அந்த நூறு பெண்களும் குதிக்கத் தொடங்கினார்கள். பாட்டைத் தேவகான மென்றேன். இந்தக் கூத்தை யெங்ஙனம் வர்ணிப்பேன்! சக்தி நாடகம்—விஷ்ணுவின் சித்தலோகம். கண்ணான் கண்ட கனு.

சிறிது நேரத்துக்கெல்லாம் கூத்து முடிந்தது. பெண்கள் மறைந்து விட்டனர்.

தீவட்டி யொளி குறைந்தது. நாலு தீவட்டிகள் மிஞ்சின. அவற்றை நான்கு வலக்கை தூக்கிப் பரதேசிகள் இடக்கையிலே தூக்கி நின்றனர்.

பண்டாரம் சொல்லுகிறான்! எந்தப் பண்டாரம் சொல்லுகிறான்! பொன்னாசனத்தின்மீது வீற்றிருந்த தலைப் பண்டாரம் சொல்கிறான்:

''வாப்பா, காளிதாஸா, பயப்படாதே. தரையின் மேல் உட்கார்ந்து கொள். மனதைக் கட்டு. மூச்சை நேராக்கு. ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. நீ செய்த நூல்கள் சில நாம் பார்த்திருக்கிறோம். 'கடலெதிர்த்து வந்தால் கலங்க மாட்டோம். தலைமேல் இடி விழுந்தால் தளர மாட்டோம்; எங்கும் அஞ்சோம்; யார்க்கு மஞ்சோம்; எதற்கு மஞ்சோம்; எப்போதும் அஞ்சோம்' என்று நீ பாடினதை நான் நேற்று ஒரு புஸ்தகத்தில் பார்த்தேன். நீ உண்மையான அனுபவத்தைச் சொன்னாயா, அல்லது வெறுங் கற்பனை தானா என்பதை அறியும் பொருட்டாக நான் உன்னை இங்கே தோணர்வித்தேன். நீ பயப்படுகிற அளவு ஆற்காட் நவாப் கூட பயந்தது கிடையாது. ஆற்காட் நவாப் சங்கதி தெரியுமா? கிளைவ் ஒரு வாயில் வழியே கோட்டைக்குள் புகுந்து பார்த்தபோது நவாப் மற்றொரு வாயில் வழியே வெளியேறி விட்டாராம். உள்ளே போனால் கிளைவ் யாருடன் சண்டை போடுவார்? அவர் பாட்டிலே போய் ஷோக்காகக் கோட்டைக்குள் பிரங்கி சகிதமாக இருந்து கொண்டு கோட்டை கொத்தளங்களைச் சிராக்கித் தான் அதை வைத்துக் கொண்டாரென்று கேள்வியுற்றதுண்டு. நீ அந்த ஆற்காடு நவாபினிடமிருந்த பிராமணச்சோதிடரின் வம்சத்தில் பிறந்தாயோ? ஆற்காட்டு பயம் பயப்படுகிறாயே! மூடா, ஆறுதலடை.''

அந்தப் பரதேசி பின்னும் சொல்லுகிறான்: ''மனுஷ்ய வாழ்க்கை சதமில்லை. பிறப்பை உடனே ஒழி. மண்ணில் பிறக்காதே. வானத்தில் ஏறு. சந்திர கலைகளில் உண்டாகும் அமிர்தத்தைப் பானஞ் செய்யும் யோகி ஒருவன் தான் உன்பாட்டில் கண்டபடி பயப்படாமலிருக்க முடியும். அதை விட்டு நமக்குத் தான் அகல வெழுதத்தெரியுமென்று நீ கிறுக்கித் தள்ளி விட்டாய். குண்டலினி அக்கினியைத் தலைக்குக் கொண்டு போ. அப்போது அமிர்த கலசமொழுகும், அந்த அக்கினியும் அமிர்தமும் ஒன்றாய் இன்ப வெள்ளத்திலே நீந்தலாம். இன்பமிருந்தால் பயமில்லை. இன்பமில்லாத போது பயம் இயற்கையிலே வரும். இருவினைக் கட்டை அறு. நன்மை தீமையென்ற குப்பையைத் தொலைவிலே தள்ளு. எல்லாம் சிவம் என்றறி. உன்னை

வெட்டவரும் வாளும் சிவன். அதைக் கும்பிடு. உன்னை அது வெட்டாது. சரணாகதிதான் வழி. பொய் பேசாதே. தீங்கு கருதாதே. பேய்க்குத் தீங்கு செய்யாதே. பகைவனுக்குத் தீமை நினைக்காதே. பகைவனையும் சிவனென்று கும்பிடு. பாம்பின் வாய்க்குள்ளே போய் விரலை விட்டு ஓம் சிவாய நம என்று சொல். உன்னைக் கடிக்காது.''

தலைமைப் பண்டாரம் பொன்னாசனத்தினின்றும் எழுந்து நின்றான். அப்போது அங்கே ஒரு சங்கோலிப் பண்டாரம் 'பம்'பம்' 'பம்' என்று சங்கெடுத்து ஊதினான். மற்றொரு சடைப் பண்டாரம் கண, கண, கணவென்று மணி யடித்தான். பிறகு பண்டாரங்கள் அத்தனை பேரும் சேர்ந்து பின்வரும் பாட்டைப் பாடினார்கள்.

''வையகத்தே சடவஸ்து வில்லை,
மண்ணுங் கல்லும் சடமில்லை,
மெய்யுரைப்பேன் பேய் மனமே
மேலுங் கீழும் பயமில்லை !— 1

பையப் பையத் தேரடா!
படையும் விஷமுங் கடவுளடா!
பொய்யு மெய்யுஞ் சிவனடா! 2
பூமண்டலத்தே பயமில்லை!

சாவு நோவுஞ் சிவனடா!
சண்டையும் வாளுஞ் சிவனடா!
பாவியு மேழையும் பாம்பும் பசுவும் 3
பண்ணுந் தானமுந் தெய்வமடா!

எங்குஞ் சிவனைக் காணடா!
ஈன பயத்தைத் துரத்தடா!
கங்கைச் சடையா, காலன் கூற்றே 4
காமன் பகையே வாழ்க நீ !—

பாழுந் தெய்வம் பதியுந் தெய்வம்
பாலை வனமுங் கடலுந் தெய்வம்
ஏழு புலியும் தெய்வம் தெய்வம் 5
எங்குந் தெய்வம் எதுவுந் தெய்வம்

வையகத்தே சடமில்லை,
மண்ணும் கல்லுந் தெய்வம்
மெய்யுரைப்பேன் பாழ் மனமே
மேலுங் கீழும் பயமில்லை!— 6

இந்தக் கன்னிகள் அந்தப் பண்டாரங்கள் பாதியிரவில் பாடுவதை அந்த ஸ்மசானத்தில் பாடக் கேட்டபோது எனக்கு மயிர்ச் சிலிர்ப்புண்டாயிற்று. அப்போது தலைமைப்பரதேசி என்னை நோக்கிச் சொல்லுகிறான்: ''காளிதாஸா, அடே! அந்தப் பெண்கள் தீவட்டி வைத்துக் கொண்டு பாட்டுப் பாடி ஆட்டமாடிப் போயினரே, அவர்கள் யார், நீ அறிவாயா?'' என்றான்.

''அறியேன், அவர்கள் யார் சொல்லு'' என்றேன். ''அவர்கள் அத்தனை பேரும் பேய்கள். இங்கு மாறுவேஷம் பூண்டு உனக்கு வேடிக்கை காட்டும் பொருட்டுத் தருவித்தேன்'' என்றான்.

''நீ யார்?'' என்று கேட்டேன்.

''நான் இந்தச் சுடுகாட்டிலுள்ள பேய்களுக்கெல்லாம் தலைவன்'' என்றான்.

# சின்ன சங்கரன் கதை

நமது நாட்டுக் கதைகளிலே பெரும்பாலும் அடி தொடங்கிக் கதாநாயகனுடைய ஊர், பெயர், குலம், கோத்திரம், பிறப்பு வளர்ப்பெல்லாம் கிரமமாகச் சொல்லிக் கொண்டு போவது வழக்கம். நவீன ஐரோப்பியக் கதைகளிலே பெரும்பகுதி அப்படியல்ல. அவர்கள் நாடகத்தைப் போல கதையை நட்ட நடுவில் தொடங்குகிறார்கள். பிறகு போகப் போகக் கதாநாயகனுடைய பூர்வ விருத்தாந்தங்கள் தெரிந்துகொண்டே போகும். எங்கேனும் ஒரு காட்டில், ஒரு குளக்கரையில், ஒரு தனி மேடையில் இவன் தனது காதலியுடன் இருப்பான். இல்லாவிட்டால் யாரேனுமொரு சிநேகிதனுடன் இருப்பான். அப்போது கதையின் ஆரம்பங்களை எடுத்து விரிப்பான். இது அவர்களுடைய வழி.

நான் இக் கதையிலே மேற்படி இரண்டு வழிகளையும் கலந்து வேலை செய்யப் போகிறேன். சின்ன சங்கரன்—நம்முடைய கதாநாயகன்—விருத்தாந்தங்களை மாத்திரம் பூர்வத்திலிருந்து கிரமமாகவே சொல்லிவிட்டு, கதையில் வரும் மற்றவர்கள் விஷயத்தில் கொஞ்சம் ஐரோப்பிய வழியைத் தழுவிக் கொண்டு செல்லக் கருதுகிறேன். சர்வகலா நிதியாகிய சரஸ்வதி தேவி எனது நூலில் கடைக்கண் வைத்திடுக.

## பிஞ்சிலே பழுத்தது

சின்ன சங்கரன் பிஞ்சிலே பழுத்து விட்டான். நம்முடைய கதாநாயகனுடைய பெயர் அத்தனை நயமில்லையென்றும் கொஞ்சம் கவுரக் குறைவாக இருக்கிறதென்றும் எவரும் கவலையுறலாகாது. போகப் போக இந்தப் பெயர் மாறிக் கொண்டே போகும். கடைசியில் படிப்பவர்கள் பயப்படும்படி அத்தனை படாடோபமாக முடியும்படி ஏற்பாடு செய்கிறேன். சின்ன சங்கரன், சங்கரன், சங்கரய்யர், சங்கர நாராயணய்யர், சங்கரநாராயண பாரதியார் இத்யாதி இத்யாதி. சின்ன சங்கரன் கவுண்டனூர் இங்கிலிஷ் பள்ளிக் கூடத்திலே மூன்றாவது வகுப்பில் படிக்கிறான். அந்தக் காலத்தில் இதை 'மிடில் ஸ்கூல்' என்பார்கள். பையனுக்கு வயது பன்னிரண்டு அல்லது பதின்மூன்றிருக்கும். இதற்குள் தமிழில் புலவராய்விட்டான். கவுண்டனூரில் ஜலம் குறைவு; பணம் குறைவு; நெல் விளைவு கிடையாது; வாழை, தென்னை, மா, பலா இவையெல்லாம் வெகு துர்பலம்; பூக்கள் மிகவும் குறைவு; ''புலவர்''களுக்கு மாத்திரம் குறைவில்லை.

அந்தச் சரக்கு மலிவு. தமிழில் சங்கரன் பலபல நூல்கள், பலபல காவியங்கள் படித்து முடித்திருந்தான். இவை பெரும்பாலும் 'சிங்கார' ரஸம் மிகுந்திருப்பன. இந்த ஜாதிக் காவியங்கள்தான் சங்கரனுக்குப் பிடிக்கும். கவுண்டனூர்ப் புலவர்கள் எல்லோருக்கும் இப்படியேதான். மன்மத விகாரத்தைப் புகழ்ந்து பேசியிருக்கும் நூல்களும் தனிப்பாடல்களும் அவ்வூரிலே வெகு சாதாரணம். சங்கரனுக்கும் அவை வெகு சாதாரணமாயின. "பாஷைகளிலே தமிழ் சிறந்தது. தமிழில் இருளப்ப நாயக்கன் காதல், செறுவூர்க் கோவை, பிச்சித்தேவன் உலாமடல் முதலிய காவியங்கள் நிகரற்ற பெருமையுடையன. இவற்றிலுள்ள சுவை உலகத்தில் வேறெதிலுமில்லை" என்பது சின்ன சங்கரனுடைய கொள்கை. சங்கரன் கொஞ்சம் குள்ளனாக இருந்தபடியால் பள்ளிக்கூடத்தில் மற்றப் பிள்ளைகள் அவனுக்குச் 'சின்ன சங்கரன்' என்று பெயர் வைத்து விட்டார்கள்.

தென்பாண்டி நாட்டிலே, பொதிய மலைக்கு வடக்கே இருபது காத தூரத்தில் பூமி தேவிக்குத் திலகம் (வைத்து அது உலர்ந்து போயிருப்பது) போலக் கவுண்டபுரம் என்ற நகரம் திகழ்ச்சி பெற்றது. அதைத்தான் பாமர ஜனங்கள் கவுண்டனூர் என்பார்கள். இந் நகரத்தில் நமது கதை தொடங்கும் காலத்திலே மகா கீர்த்திமானாகிய ராமசாமிக் கவுண்டரவர்கள் அரசு செலுத்தி வந்தனர். வெளியூர்ப் பாமர ஜனங்கள் இவரை 'ஜமீந்தார்' என்பார்கள். கவுண்டபுரத்திலே இவருக்கு "மகா ராஜா" என்றும் பட்டம். கவுண்டரின் மூதாதைகளின் மீது பண்டைக்காலத்துப் புலவர்கள் பாடியிருக்கும் 'இன்ப விஸ்தாரம்' முதலிய நூல்களை அவ்வூர்ப் புலவர்களும், அவர்களைப் பின்பற்றி மற்ற ஜனங்களும் வேதம் போலக் கொண்டாடுவார்கள்.

ராமசாமிக் கவுண்டர் (இவருடைய முழுப் பெயரைப் பட்டங்கள் சகிதமாகப் பின்பு சொல்லுகிறேன்) தமிழில் அபிமானமுடையராதலால், கவிதை பாடத் தெரிந்தவர்களுக்கு அவ்வூரில் மிகுந்த மதிப்புண்டு. சின்ன சங்கரனுக்குப் பத்து வயது முதலாகவே கவி பாடும் தொழிலில் பழக்க முண்டாய்விட்டது. எப்போதும் 'புலவர்'களுடனேதான் சகவாஸம். ஒத்த வயதுப் பிள்ளைகளுடன் இவன் சேர்ந்து விளையாடப் போவதில்லை. எங்கேனும் மதன நூல்கள் வாசித்துப் பலர் உட்கார்ந்து ரஸித்துக் கொண்டிருப்பதைக் கண்டால், இவனும் அங்கே போய் உட்கார்ந்து விடுவான், பள்ளிக்கூடத்துப் பாடங்களெல்லாம் கிருஷ்ணார்ப்பணந்தான். பூகோள சாஸ்திரம், கணக்கு, சுகவழி முதலிய எத்தனையோ பாடங்கள் கீழ் வகுப்புகளிலே இவனுக்குக் கற்றுக் கொடுக்க முயற்சி செய்தார்கள். ஒன்றிலும் இவன் கருத்தைச் செலுத்தவில்லை. இவனுக்கு எப்போதும் ஒரே சாஸ்திரம். ஒரே கணக்கு, ஒரே வழிதானுண்டு.

**"சாற்றுவதும் காமகலை சாதிப்பதும்**
**போற்றுவதும் காமனடிப் போது"**

கவுண்டனூர்ப் 'புலவர்' கூட்டத்திலே சங்கரன் ஒருவனாகி விட்டான். சுருக்கம் அவ்வளவுதான். இவன் பாட்டுக்களில் சில சில பிழைகள்

இருந்தபோதிலும் இவனுடைய சிறுவயதைக் கருதி அப் பிழைகளை யாரும் கணிப்பதில்லை. சுவை மிகுதியைக் கருதி இவனை மிதமிஞ்சிப் புகழ்வோர் பலராயினர். ஒரு பாட்டில் எத்தனைக் கெத்தனை அசுத்தமான வார்த்தைகள் சேர்கின்றனவோ அத்தனைக் கத்தனை சுவையதிகமென்பது கவுண்டனூர்ப் புலவர்களுடைய முடிவு. எனவே, பையன் நாவும் கையும் சிறிதேனும் கூசாமல், காமுகர்களுக்கு வேண்டிய பதங்களைத் தாராளமாகப் பொழிந்து பாடல்கள் செய்யலானான். சங்கரனுடைய பந்துக்களுக்கெல்லாம் இந்த விஷயத்தில் பரமாநந்தம். இவனுக்கு மூன்று வயதிலேயே தாய் இறந்து போய்விட்டாள். தகப்பனார் பெயர் சுப்பிரமணிய அய்யர். அவர் ராமசாமிக் கவுண்டருடைய ஆப்தர்களிலே ஒருவர். இங்கிலிஷ் படித்துப் பழைய காலத்துப் பரிக்ஷை ஏதோ தேறி சர்க்கார் உத்தியோகத்துக்குப் போகாமல் வியாபாரஞ் செய்து சிறிது பணம் தேடி வைத்து விட்டார். இவருக்கு இரண்டாந்தாரம் விவாகமாய்விட்டது. எனவே தனது தாயைப் பெற்ற பாட்டனாரும் பாட்டியும் சங்கரனைப் பிராணனாகவே நினைத்து விட்டார்கள். சங்கரன் விளையாடுவதற்கு வேண்டுமென்று கேட்டால் தாத்தா தாம் பூஜை செய்யும் சிவலிங்கத்தைக் கூடக் கொடுத்து விடுவார். அத்தனை 'செல்லம்'. ஆனால் சிவலிங்கத்தைப் பற்றி யாதொரு விதமான பயத்துக்கும்இடமில்லை. பையன்தான் விளையாட்டில் புத்தி செலுத்தும் பழக்கமில்லையே! பையனுடைய கையும் காலும் வாழைத் தண்டைப் போலிருக்கும். பிராணசக்தி வெகு சொற்பம். நெஞ்சு அரையே மாகாணி அடியகலம். கண்கள் குதுவாகி நோய் பிடித்திருக்கும். கன்னிகளின் கண்களைப் போலிருக்கும். முதுகிலே கூன். ஆணாயினும், பெண்ணாயினும் ஏதேனும் ஓர் புதிய முகத்தைப் பார்த்தால் கூச்சப்படுவான். தற்காலத்தில் நமது தேசத்துப் பள்ளிக்கூடங்களிலேயே பிள்ளைகளைப் பெண்களாக்கி விடும் திறமை உபாத்திமார்களுக்கு அதிகமுண்டு. அத்துடன் ''கவிதை'' யுஞ் சேர்ந்துவிட்டது-கவுண்ட னூர்க் கவிதை, பையனுக்கு ஜீவதாது மிகவும் குறைந்து பொய்மை நிறைந்த சித்த சலனங்கள் மிகுதிப்பட்டு விட்டன.

இந்த விநோதமான பிள்ளையைத் தாத்தாவும் பாட்டியும் ஏதுமறியாத வெறும்பொம்மை போலப் பாராட்டினார்கள். 'பால் மனம் மாறாத குழந்தை' என்பது அவர்களுடைய கருத்து. அவனுக்கென்று தனியாக ஒரு சுபாவமும், தனி சமஸ்காரங்களும் ஏற்பட்டதாகவே அவர்களுக்கு நினைப்பில்லை. அவனுடைய புலமை ஈசனால் கொடுக்கப் பட்ட வரமென்றெண்ணினார்கள். ஏதுமறியாத குழந்தைக்குஇப்படிக் கல்வி ஏற்பட்ட ஆச்சரியத்தால் அவர்களுக்கு அளவிறந்த மகிழ்ச்சி புண்டாயிற்றே யல்லாது அவன் 'பாப்பா' என்ற எண்ணம் மாற வில்லை. இரண்டு மூன்று தினங்களுக்கொரு முறை பாட்டி அவனுக்குச் 'சாந்தி' கழிப்பாள். சுண்ணாம்புக்கும் மஞ்சளுக்கும் செலவதிகம்-சங்கரனுக்குக் ''கண்பட்டது'' கழியும் பொருட்டாக.

தகப்பனார் இவனைப் ''பையன்'' என்று பேசுவார். இவன் முற்றிப்போன விஷயம் அவருக்குத் தெரியாது. இவனுடைய ''கீர்த்தி' புலவர்களுக்குள்ளே பரவி கவுண்டரவர்கள் செவிவரை எட்டிப்

அந்தச் சரக்கு மலிவு. தமிழில் சங்கரன் பலபல நூல்கள், பலபல காவியங்கள் படித்து முடித்திருந்தான். இவை பெரும்பாலும் 'சிங்கார' ரஸம் மிகுந்திருப்பன. இந்த ஜாதிக் காவியங்கள்தான் சங்கரனுக்குப் பிடிக்கும். கவுண்டனூர்ப் புலவர்கள் எல்லோருக்கும் இப்படியேதான். மன்மத விகாரத்தைப் புகழ்ந்து பேசியிருக்கும் நூல்களும் தனிப்பாடல்களும் அவ்வூரிலே வெகு சாதாரணம். சங்கரனுக்கும் அவை வெகு சாதாரணமாயின. ''பாஷைகளிலே தமிழ் சிறந்தது. தமிழில் இருளப்ப நாயக்கன் காதல், செறுவூர்க் கோவை, பிச்சித்தேவன் உலாமடல் முதலிய காவியங்கள் நிகரற்ற பெருமையுடையன. இவற்றிலுள்ள சுவை உலகத்தில் வேறெதிலுமில்லை'' என்பது சின்ன சங்கரனுடைய கொள்கை. சங்கரன் கொஞ்சம் குள்ளனாக இருந்தபடியால் பள்ளிக்கூடத்தில் மற்றப் பிள்ளைகள் அவனுக்குச் 'சின்ன சங்கரன்' என்று பெயர் வைத்து விட்டார்கள்.

தென்பாண்டி நாட்டிலே, பொதிய மலைக்கு வடக்கே இருபது காத தூரத்தில் பூமி தேவிக்குத் திலகம் (வைத்து அது உலர்ந்து போயிருப்பது) போலக் கவுண்டபுரம் என்ற நகரம் திகழ்ச்சி பெற்றது. அதைத்தான் பாமர ஜனங்கள் கவுண்டனூர் என்பார்கள். இந் நகரத்தில் நமது கதை தொடங்கும் காலத்திலே மகா கீர்த்திமானாகிய ராமசாமிக் கவுண்டரவர்கள் அரசு செலுத்தி வந்தனர். வெளியூர்ப் பாமர ஜனங்கள் இவரை 'ஜமீந்தார்' என்பார்கள். கவுண்டபுரத்திலே இவருக்கு ''மகா ராஜா'' என்றும் பட்டம். கவுண்டரின் மூதாதைகளின் மீது பண்டைக்காலத்துப் புலவர்கள் பாடியிருக்கும் 'இன்ப விஸ்தாரம்' முதலிய நூல்களை அவ்வூர்ப் புலவர்களும், அவர்களைப் பின்பற்றி மற்ற ஜனங்களும் வேதம் போலக் கொண்டாடுவார்கள்.

ராமசாமிக் கவுண்டர் (இவருடைய முழுப் பெயரைப் பட்டங்கள் சகிதமாகப் பின்பு சொல்லுகிறேன்) தமிழில் அபிமானமுடையவராதலால், கவிதை பாடத் தெரிந்தவர்களுக்கு அவ்வூரில் மிகுந்த மதிப்புண்டு. சின்ன சங்கரனுக்குப் பத்து வயது முதலாகவே கவி பாடும் தொழிலில் பழக்க முண்டாய்விட்டது. எப்போதும் 'புலவர்' களுடனேதான் சகவாஸம். ஒத்த வயதுப் பிள்ளைகளுடன் இவன் சேர்ந்து விளையாடப் போவதில்லை. எங்கேனும் மதன நூல்கள் வாசித்துப் பலர் உட்கார்ந்து ரஸித்துக் கொண்டிருப்பதைக் கண்டால், இவனும் அங்கே போய் உட்கார்ந்து விடுவான், பள்ளிக்கூடத்துப் பாடங்களெல்லாம் கிருஷ்ணார்ப்பணந்தான். பூகோள சாஸ்திரம், கணக்கு, சுகவழி முதலிய எத்தனையோ பாடங்கள் கீழ் வகுப்புகளிலே இவனுக்குக் கற்றுக் கொடுக்க முயற்சி செய்தார்கள். ஒன்றிலும் இவன் கருத்தைச் செலுத்தவில்லை. இவனுக்கு எப்போதும் ஒரே சாஸ்திரம். ஒரே கணக்கு, ஒரே வழிதானுண்டு.

**''சாற்றுவதும் காமகலை சாதிப்பதும்**
**போற்றுவதும் காமனடிப் போது''**

கவுண்டனூர்ப் 'புலவர்' கூட்டத்திலே சங்கரன் ஒருவனாகி விட்டான். சுருக்கம் அவ்வளவுதான். இவன் பாட்டுக்களில் சில சில பிழைகள்

இருந்தபோதிலும் இவனுடைய சிறுவயதைக் கருதி அப் பிழைகளை யாரும் கணிப்பதில்லை. சுவை மிகுதியைக் கருதி இவனை மிதமிஞ்சிப் புகழ்வோர் பலராயினர். ஒரு பாட்டில் எத்தனைக் கெத்தனை அசுத்தமான வார்த்தைகள் சேர்கின்றனவோ அத்தனைக் கத்தனை சுவையதிக மென்பது கவுண்டனூர்ப் புலவர்களுடைய முடிவு. எனவே, பையன் நாவும் கையும் சிறிதேனும் கூசாமல், காமுகர்களுக்கு வேண்டிய பதங்களைத் தாராளமாகப் பொழிந்து பாடல்கள் செய்யலானான். சங்கரனுடைய பந்துக்களுக்கெல்லாம் இந்த விஷயத்தில் பரமாநந்தம். இவனுக்கு மூன்று வயதிலேயே தாய் இறந்து போய்விட்டாள். தகப்பனார் பெயர் சுப்பிரமணிய அய்யர். அவர் ராமசாமிக் கவுண்டருடைய ஆப்தர்களிலே ஒருவர். இங்கிலீஷ் படித்துப் பழைய காலத்துப் பரீக்ஷை ஏதோ தேறி சர்க்கார் உத்தியோகத்துக்குப் போகாமல் வியாபாரஞ் செய்து சிறிது பணம் தேடி வைத்து விட்டார். இவருக்கு இரண்டாந்தாரம் விவாகமாய்விட்டது. எனவே தனது தாயைப் பெற்ற பாட்டனும் பாட்டியும் சங்கரனைப் பிராணனாகவே நினைத்து விட்டார்கள். சங்கரன் விளையாடுவதற்கு வேண்டுமென்று கேட்டால் தாத்தா தாம் பூஜை செய்யும் சிவலிங்கத்தைக் கூடக் கொடுத்து விடுவார். அத்தனை 'செல்லம்'. ஆனால் சிவலிங்கத்தைப் பற்றி யாதொரு விதமான பயத்துக்கும்இடமில்லை. பையன்தான் விளையாட்டில் புத்தி செலுத்தும் பழக்கமில்லையே! பையனுடைய கையும் காலும் வாழைத் தண்டைப் போலிருக்கும். பிராணசக்தி வெகு சொற்பம். நெஞ்சு அரையே மாகாணி அடியகலம். கண்கள் ருதுவாகி நோய் பிடித்திருக்கும். கன்னிகளின் கண்களைப் போலிருக்கும். முதுகிலே கூன். ஆணாயினும், பெண்ணாயினும் ஏதேனும் ஓர் புதிய முகத்தைப் பார்த்தால் கூச்சப்படுவான். தற்காலத்தில் நமது தேசத்துப் பள்ளிக்கூடங்களிலேயே பிள்ளைகளைப் பெண்களாக்கி விடும் திறமை உபாத்திமார்களுக்கு அதிகமுண்டு. அத்துடன் ''கவிதை'' யுஞ் சேர்ந்துவிட்டது-கவுண்ட னூர்க் கவிதை, பையனுக்கு ஜீவதாது மிகவும் குறைந்து பொய்மை நிறைந்த சித்த சலனங்கள் மிகுதிப்பட்டு விட்டன.

இந்த விநோதமான பிள்ளையைத் தாத்தாவும் பாட்டியும் ஏதுமறியாத வெறும்பொம்மை போலப் பாராட்டினார்கள். 'பால் மனம் மாறாத குழந்தை' என்பது அவர்களுடைய கருத்து. அவனுக்கென்று தனியாக ஒரு சுபாவமும், தனி சமஸ்காரங்களும் ஏற்பட்டதாகவே அவர்களுக்கு நினைப்பில்லை. அவனுடைய புலமை ஈசனால் கொடுக்கப்பட்ட வரமென்றெண்ணினார்கள். ஏதுமறியாதகுழந்தைக்குஇப்படிக் கல்வி ஏற்பட்ட ஆச்சரியத்தால் அவர்களுக்கு அளவிறந்த மகிழ்ச்சியுண்டாயிற்றே யல்லாது அவன் 'பாப்பா' என்ற எண்ணம் மாறவில்லை. இரண்டு மூன்று தினங்களுக்கொரு முறை பாட்டி அவனுக்குச் 'சாந்தி' கழிப்பாள். சுண்ணாம்புக்கும் மஞ்சளுக்கும் செலவதிகம்-சங்கரனுக்குக் ''கண்பட்டது'' கழியும் பொருட்டாக.

தகப்பனார் இவனைப் ''பையன்'' என்று பேசுவார். இவன் முற்றிப்போன விஷயம் அவருக்குத் தெரியாது. இவனுடைய ''கீர்த்தி' புலவர்களுக்குள்ளே பரவி கவுண்டரவர்கள் செவிவரை எட்டிப்

போயிற்று. இதிலிருந்து சுப்பிரமணிய அய்யருக்கு மிகுந்த சந்தோஷம். ஆனால் பள்ளிக்கூடத்துப் பாடங்களை நேரே படிப்பதில்லையென்பதில் கொஞ்சம் வருத்தமுண்டு. இவனைப் பெரிய பரீக்ஷைகள் தேறும்படி செய்து சீமைக்கனுப்பி ஜில்லா கலெக்டர் வேலைக்குத் தயார் செய்யவேண்டுமென்பது அவருடைய ஆசை. அதற்கு இவன் புலவர்களிடம் சகவாஸம் செய்வதுதான் பெரிய தடையென்பது அவர் புத்தியில் தட்டவில்லை. இவனுடைய மாமனாகிய கல்யாண சுந்தரம் முதலிய சில துஷ்டப் பையன்களுடன் சேர்ந்து ''விளையாடிக்'' கெட்டுப் போகிறானென்றும், தாய் விட்டார் கொடுக்கும் செல்லத்தால் தீங்குண்டாகிறதென்றும், இவ்விரண்டையும் கூடிய வரை குறைத்துக் கொண்டு வரவேண்டுமென்றும் அவர் தீர்மானஞ் செய்தார்.

இனி, இவனுடன் ஒத்த வயதுள்ள பிள்ளைகள் ஆரம்பத்திலே சங்கரனை இகழ்ச்சியில் வைத்திருந்தார்கள். பிறகு, நாளடைவில் சங்கரன் ஒரு 'வித்துவான்' ஆகிவிட்டதைக் கண்டவுடனே அந்தப் பிள்ளைகளுக்கெல்லாம் அவனிடம் ஒருவிதமான பயமும் வியப்பும் உண்டாயின. 'இவன் நோஞ்சப் பயல்; ஒரு இழவுக்கும் உதவமாட்டான்' என்று முன்போல வாய்திறந்து சொல்வதில்லை. மனதிற்குள் அவ்வெண்ணத்தை அடக்கி விட்டார்கள்.

பள்ளிக்கூடத்துக்குப் போனால் சங்கரனை உபாத்திமார், ''புலவரே, பலகையின் மேல் ஏறி நில்லும்'' என்பார்கள், பாடங்கள் நேரே சொல்லாதது பற்றி நமது சின்னப் புலவர் பலகையின் மேல் ஏறி நின்றுகொண்டு மனதிற்குள்ளே எதுகைகளடுக்கிக் கொண்டிருப்பார். உபாத்தியாயர் கரும் பலகை மேல் கணக்குப் போட்டுக் கொண்டிருப்பார்.

இவன்,

''புலவன், அலவன், வலவன்,
பலகை, அலகை, உலகை,
நில், நெல், வில், பல், சொல், அல்,
எல், கல், மல், வெல், வல்
கணக்கு, வணக்கு, இணக்கு—''

என்று தனக்குள்ளே கட்டிக்கொண்டு போவான்.

வாத்தியார் 00.2853x...

என்று ஒரு கணக்குப் போட்டு முடிவுகட்டிக் கொண்டு போகையில், சங்கரனை நோக்கி, ''சங்கரன்! புள்ளியை எந்த இலக்கத்தின் மேல் போடுகிறது? சொல் பார்ப்போம்,'' என்பார். இவன் மறுமொழி சொல்லாமல் பித்துக்கொண்டவன் போலிருப்பான். அவர், ''என்னடா, விழிக்கிறாய்?'' என்று கேட்டுத் திட்டியபிறகு அடுத்த பையனிடம் வினவுவார்.

அடுத்தவன் ஏது சொல்கிறான் என்பதைக்கூடக் கவனியாமல், இவன் மனதிற்குள்,

விழி, இழி, கிழி, பிழி, வழி, கழி, அழி, பழி, மொழி, ஒழி, புள்ளி, உள்ளி, பள்ளி, அள்ளி, கள்ளி, தெள்ளி, வெள்ளி என்று அடுக்கிக் கொண்டே போவான்.

தமிழ்ப் பாடம் வரும்போது மாத்திரம் கொஞ்சம் கவனிப்பான். அதிற்கூட இலக்கணம் தடவும்.

இவருடைய தகப்பனாரின் மதிப்பையும் ராமசாமி கவுண்டர் இவனிடம் தயவு பாராட்டுகிறாரென்பதையும் உத்தேசித்துஉபாத்திமார் இவனை அதிகமாக அடித்துக் கொல்வதில்லை. ''இவன் கடைசி வரை உருப்படமாட்டான்'' என்பது அவர்களுடைய முடிவு.

ஊரிலுள்ள பெண்குட்டிகளெல்லாம் ''சங்கரன் அப்பாவி'' என்று சொல்லும். இவ்வாறு அவரவர் தத்தமக்கு ஒத்தபடி நினைத்துக் கொண்டிருக்கையில், சங்கரன் பிரத்யேகமாக ஒரு வகையில் முதிர்ந்து வருகிறான். எல்லார் விஷயமும் இப்படியேதான். ஒருவனுடைய உள்ளியல்பை மற்றொருவன் முழுதும் அறிந்து கொள்ளுதல் எக்காலத்திலும் சாத்தியமில்லை. அவனவனுடைய இயல்பு அவனவனுக்கே தெளிவாகத் தெரியாது. பிறனுக்கெப்படி விளங்கும்?

பிள்ளைகளையும் பெண்களையும் பற்றித் தாய் தகப்பன்மார் கொண்டிருக்கும் எண்ணம் பெரும்பாலும் தப்பாகவேயிருக்கும். குழந்தைகளின் அறிவும் இயல்பும் எவ்வளவு சீக்கிரத்தில் மாறிச் செல்லுகின்றனவென்பதைப் பெற்றோர் அறிவதில்லை. ''பாப்பா பாப்பா'' என்று நினைத்துக் கொண்டேயிருக்கிறார்கள். பதினாறு, பதினேழு வயதாகும்போது, ''அப்பாப்பா'', ''அப்பாப்பா'' என்கிறார்கள்.

## ராமசாமிக் கவுண்டர் திருச்சபை

மகாராஜ ராஜபூஜித மகாராஜ ராஜஸ்ரீ ராஜமார்த்தாண்ட கவுண்டாதி கவுண்ட கவுண்ட சண்டப் பிரசண்ட அண்ட பகிரண்ட கவுண்டரவர்களுக்கு வயது சுமார் ஐம்பதிருக்கும். நல்ல கறுநிறம், நரைபாய்ந்த மீசை, கிருதா, முன்புறம் நன்றாகப் பளிங்குபோல் தேய்க்கப்பட்டு, நடுத்தலையில் தவடு பாய்ந்து, பின்புறம் ஒரு சிறிய முடிச்சுப்போட்டு விளங்கும் முக்கால் நரையான தலை. நெடுந்தூரம் குழிந்த கண்கள். இமைப்புறங்களில் 'காக்கைக்கால்' அடையாளங்கள். பொடியினால் அலங்கரிக்கப்பட்ட மூக்கு. வெற்றிலைக் காவியினாலும் புகையிலைச் சாற்றினாலும் அலங்கரிக்கப்பட்ட பற்கள். குத்துயிரோடு கிடக்கும் உதடு. ஆபரணங்கள் பொருந்திய செவிகள். பூதாகாரமான உடல். பிள்ளையார் வயிறு. ஒருவிதமான இருமல். அரையில் பட்டு ஜரிகை வேஷ்டி. விரல் நிறைய மோதிரங்கள். பக்கத்திலே வெற்றிலை துப்புவதற்கு ஒரு காளாஞ்சி. ஒரு அடப்பைக்காரன்—இதுதான் ராமசாமிக் கவுண்டர்.

இவர் காலையில் எழுந்தால், இரவில் நித்திரை போகும் வரை செய்யும் தினசரிக் காரியங்கள் பின்வருமாறு:

காலை எட்டு அல்லது எட்டரை மணி வேளைக்கு எழுந்து கைகால் சுத்தி செய்து கொண்டு ஒன்பது மணியானவுடன் பழையது சாப்பிட உட்காருவார். பழையதிற்குத் தொட்டுக் கொள்ளத் தமது அரண்மனையிலுள்ள கறிவகை போதாதென்று வெளியே பல வீடுகளிலிருந்து பழங்கறிகள் கொண்டு வரச்சொல்லி வெகு ரஸமாக உண்பார். (அதாவது காலை 'லேகியம்' முடிந்த பிறகு, இந்த அபினி லேகியம் உருட்டிப் போட்டுக் கொள்ளாமல் ஒரு காரியங்கூடத் தொடங்கமாட்டார். பார்ப்பார் எடுத்ததற்கெல்லாம் ஆசனம் செய்யத் தவறுதிருப்பதுபோல) பழையது முடிந்தவுடன் அந்தப்புரத்தை விட்டு வெளியேறி இவருடைய சபாமண்டபத்தருகேயுள்ள ஒரு கூடத்தில் சாய்வு நாற்காலியின்மீது வந்து படுத்துக் கொள்வார். ஒருவன் கால்களிரண்டையும் பிடித்துக் கொண்டிருப்பான். இவர் வெற்றிலை போட்டுக் காளாஞ்சியில் துப்பியபடியாக இருப்பார்.

எதிரே அதாவது உத்தியோகஸ்தர், வேலையாட்கள், கவுண்டனூர்ப் பிரபுக்கள். இவர்களில் ஒருவன் வந்து கதை, புரளி, கோள் வார்த்தை, ஊர்வம்பு, ராஜாங்க விவகாரங்கள் - ஏதேனும் பேசிக் கொண்டிருப்பான். சில நாட்களிலே வெளி முற்றத்தில் கோழிச் சண்டை நடக்கும். வெளியூரிலிருந்து யாரேனுமொரு கவுண்டன் ஒரு நல்ல போர்ச் சேவல் கொண்டு வருவான். அரண்மனைச் சேவலுக்கும் அதற்கும் சண்டை விட்டுப் பார்ப்பார்கள். அரண்மனைச் சேவல் எதிரியை நல்ல அடிகள் அடிக்கும்போது, ஜமீன்தாரவர்கள். நிஷ்பக்ஷபாதமாக, இருபக்கத்துக் கோழிகளின் தாய், பாட்டி, அக்காள், தங்கை எல்லோரையும் வாய் குளிர வைது, சந்தோஷம் பாராட்டுவார். களத்திலே ஆரவாரமும், கூக்குரலும், நிசபாரையும் பொறுக்க முடியாமலிருக்கும்.

பெரும்பாலும், சண்டை முடிவிலே அரண்மனைக் கோழிதான் தோற்றுப் போவது வழக்கம். அங்ஙனம் முடியும்போது வந்த கவுண்டன் தனது வெற்றிச் சேவலை ராமசாமி கவுண்டரவர்கள் திருவடியருகே வைத்து சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிடுவான். இவர் அச் சேவலைப் பெற்றுக்கொண்டு, அவனுக்கு நல்ல பாகை, உத்தரீயம், மோதிரம் ஏதேனும் சன்மானம் பண்ணி அனுப்பிவிடுவார். பிறகு பழைய அரண்மனைச் சேவலைத் தள்ளிவிட்டுப் புதிதாக வந்த சேவலைச் ''சமஸ்தான வித்வானாக'' வைப்பார்கள். அடுத்த சண்டையில் இது தோற்றுப் போய் மற்றொன்று வரும். எத்தனை வீரமுள்ள சேவலாக இருந்தாலும் கவுண்டனூர் அரண்மனைக்கு வந்து ஒரு மாதமிருந்தால் பிறகு சண்டைக்குப் பிரயோஜனப்படாது. ஜமீன் போஷணையிலேயே அந்த நயமுண்டாகிறது.

பகல் ஒன்றரை மணிக்கு ஸ்நானம் தொடங்கும். வெந்நீரிலே தான் ஸ்நானம் செய்வார். ராமசாமிக் கவுண்டர் ஸ்நானஞ் செய்வதென்றால், அது சாதாரணக் காரியமன்று. ஜலத்தை யெடுத்து ஊற்றுவதற்கு இரண்டு பேர். உடம்பு தேய்க்க இரண்டுபேர். தலை

துவட்ட ஒருவன். உடம்பு துடைக்க ஒருவன். வேறு வேஷ்டி கொண்டு அரையிலுடுத்த ஒருவன். நேபாளத்து ராஜாவின் பிரேதத்துக்குக் கூட இந்த உபசாரம் நடக்காது.

ஸ்நானம் முடிந்தவுடனே பூஜை. ஜமீந்தார் பூக்களை வாரி வாரி முன்னே வைத்திருக்கும் விக்கிரகத்தின் மேல் வீசுவார். பூஜா காலத்தில் ஸ்தல பாகவதர்கள் வந்து பாடுவார்கள். சில சமயங்களில் சங்கீத விஷயமாக சம்பாஷணைகள் நடப்பதுண்டு. ஜமீன்தார் தாம் 'கவனம்' செய்த கீர்த்தனைகளைப் பாகவதர்களிடம் பாடிக் காட்டுவார். (சங்கீதத்திலும் சாஹித்தியத்திலும் ராமசாமிக் கவுண்டர் புலி. அந்த சங்கதி ஞாபகமிருக்கட்டும்.)

ஒருவன் சமஸ்தான வித்வான்—அண்ணாத்துரை ஐயர். தோடி—நாராயணய்யங்கார். பல்லவி—வேதாசலக் குருக்கள் முதலிய வித்துவான்களனைவரும் வந்து கூடியிருந்தனர். அண்ணாதுரை அய்யரை நோக்கி ஜமீந்தார்: ''நான் அடாணாவில் ''மானே யங்கே, போனவகை யென்னடி'' என்ற வர்ண மெட்டிலே 'பரமசிவன்மேல் ஒரு 'சாஹித்தியம் பார்த்திருக்கிறேன்'. (ஒரு கீர்த்தனை செய்திருக்கிறேன் என்றர்த்தம்.) அதை நீங்கள் கேட்க வில்லையே—என்றார்.

''உத்திரவாகட்டும்'' என்றார் பாகவதர். (சொல்லு கேட்போம்—என்றர்த்தம்)

உடனே ஜமீந்தார் ஜலதோஷம் பிடித்த பன்னிரண்டு குயில்கள் சேர்ந்து சுருதியும், லயமும் ஒன்றுபடாமல் பாடுவது போன்ற தமது திவ்விய சாரீரத்தை எடுத்துப் பின்வரும் கீர்த்தனை பாடலாயினர். ஒரு பாகவதர் தம்பூரில் சுருதி மீட்டினார். ஜமீந்தார் அந்த சுருதியை லக்ஷியம் பண்ணவில்லை.

ராகம்— டாணா தாளம்—ரூபகம்

(மானே யங்கே போனவகை யென்னடி
என்ற வர்ண மெட்டு)

பல்லவி

மானே கையில் தானே தரித்தானே—ஒரு
மாதைத் தரித்தானே மழுவைத் தரித்தானே. (மா)

[பல்லவியில் முதல் வரி பாடி முடிப்பதற்குள்ளாகவே அண்ணாத்துரை பாகவதர் ''பேஷான கீர்த்தனம்! பேஷான கீர்த்தனம்! சபாஷ்! சபாஷ்!'' என்றார். ''ஒரு வரிபாடுமுன்னே இது நல்ல கீர்த்தனை யென்று எப்படித் தெரிந்தது?'' என்று ஜமீன்தார் கேட்டார். ''ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கை பதம் பார்த்தால் போதாதா?'' என்றார் பாகவதர். ஜமீந்தாரும் இந்த நியாயத்துக்குக் கட்டுப்பட்டு சந்தோஷ மிகுந்தவராய் மேலே பாடலாயினர்.]

பல்லவி

மானே கையில் தானே தரித்தானே—ஒரு
மாதைத் தரித்தானே மழுவைத் தரித்தானே (மா)

அனுபல்லவி

கோனே சிவனே குருவே யருவே மெய்ஞ்
ஞான பான மோனமான நாதா தாமரைப்
பாதா (மா)

*[''அனுபல்லவியில் இரண்டாம் அடியில் 'முடுகு' வைத்திருக்கிறேன் பார்த்தீர்களா?'' என்று ஜமீன்தார் கேட்க, பாகவதர்களெல்லோரும் ''பேஷ்! பேஷ்! பேஷ்!'' என்றனர்.]*

சரணம்

எந்தனை மோக்ஷ கதியினில் சேர்த்திட
இன்னமு மாகாதா?—உன்னைச்
சொந்தக்குல தெய்வ மென்றுநித் தந்துதி
சொன்னது போதாதா?
விந்தை யுடனிங்கு வந்தென்னை யாளவும்
மெத்த மெத்த வாதா?
வந்தனை தந்துனைப் போற்றிடும் ராமசா
மிக்கவுண்டராஜ—போஜ னுக்கருள்செய்
யும்பாதா (மா)

''மிக்கவுண்ட ராஜபோஜ
னுக்கருள்செய் யும்பாதா.''

*என்று கடைசியடியை இரண்டாமுறை திருப்பிப் பாடி, ராமசாமிக் கவுண்டர், மிகவும் திருப்தியுடன், தியாகையர் 'நகு மோமு' கீர்த்தனத்தை ஒரு சிஷ்யனிடம் முதல் முறை பாடிக் காட்டிய பிறகு புன்சிரிப்புச் சிரிப்பதுபோல நகைத்தருளினர்.*

*பாகவதர்களெல்லோரும் சபாஷ் சொல்லிக் கொட்டி விட்டார்கள்.*

*பிறகு அண்ணாத்துரை பாகவதர், ''மகாராஜா இந்தக் கீர்த்தனத்தை எழுதிக் கொடுத்தால் நான் வீட்டிலே போய்ச் சிட்டை ஸ்வரங்கள் சேர்த்துப் பாட்டையும் நன்முகப் பாடம் செய்து கொண்டு வருவேன். இதை நித்தியம் பூஜா காலத்தில் பாட வேண்டுமென்று என்னுடைய அபிப்பிராயம்'' என்றார்.*

''அதுக்கென்ன? செய்யுங்கள்!'' என்றார் ஜமீன்தார்.

பூஜை முடிந்தவுடனே போஜனம். பழையது தின்ன ஊரார் வீட்டுக் கறிகளெல்லாம் தருவித்த மனிதன் பகற் சோற்றுக்கு ஊரைச் சும்மா விடுவானா? கிருஷ்ணய்யங்கார் வீட்டிலிருந்து ''உப்புச்சாறு'', கேசவய்யர் வீட்டிலிருந்து ''அவியல்'', குமாரசாமிப் பிள்ளை வீட்டுக் கீரைச் சுண்டல். இன்னும் பலர் வீட்டிலிருந்து பலவித மாமிசப் பக்குவங்கள். இவ்வளவு கோலாகலத்துடன் ஒரு மட்டில் போஜனம் முடிவு பெறும்.

ராமசாமிக் கவுண்டர், பார்ப்பார் சொல்லுவதுபோல, நல்ல ''போஜனப் பிரியன்''. மெலிந்த சரீரமுடைய ஒரு சிநேகிதனுக்கு அவர் பின்வருமாறு பிரசங்கம் செய்ததாகச் சரிததிரங்கள் சொல்லுகின்றன.

இதோ பாரு, ரங்கா, நீயேன் மெலிஞ்சு மெலிஞ்சு போறே (போகிறாய்) தெரியுமா? சரியாய்ச் சாப்பிடவில்லை. சாப்பாடு சரியானபடி செல்ல ஒரு வழி சொல்றேன் கேளு. ஒரு கை நிறையச் சோறெடுத்தால் அதுதான் ஒரு கவளம். அப்படி நீ எத்தனை கவளம் தின்பே? எட்டுக் கவளம். ரொம்ப அதிகமாய்ப் போனால் ஒன்பது கவளம் வைச்சுக்கோ. அவ்வளவுதான். சாஸ்திரப்படி முப்பத்திரண்டு கவளம் சாப்பிடவேணும். அதற்கு நீ என்ன செய்ய வேண்டுமென்றால், இன்றைக்கு ஒன்பது கவளம் சாப்பிடுகிறாயா? நாளைக்குப் பத்துக் கவளமாக்கவேணும். நாளன்றைக்குப் பதினொன்றாக்க வேணும். நாலாம் நாள் பன்னிரண்டு. இப்படி நாள்தோறும் ஒவ்வொன்றாக அதிகப்படுத்திக் கொண்டே போய் முப்பத்திரண்டாவதோடு நிறுத்திவிட வேணும். பிறகு ஒருபோதும் முப்பத்திரண்டு கவளத்திற்குக் குறையவே செய்யலாகாது.

இந்த உபதேசம், மெலிந்த உடல் கொண்ட ரங்கனுக்கு எவ்வளவு பயன்பட்டதோ, அதை அறிய மாட்டோம். ஜமீந்தாரவர்களுக்கு இந்த அநுஷ்டானம் சரிப்பட்டு வந்தது. அவர் முப்பத்திரண்டு கவளத்திற்குக் குறைவாக ஒருபோதும் சாப்பிடுவதில்லை. ஒருபோதும் மெலிவதுமில்லை.

பகல் போஜனம் முடிந்தவுடனே ஜமீந்தார் நித்திரை செய்யத் தொடங்குவார். அரண்மனைக்கு வெளியேகூடச் சில சமயங்களில் சத்தங் கேட்கும்படியாகக் குறட்டை விட்டுத் தூங்குவார். மாலை ஐந்து மணிக்கு விழிப்பார். விழித்தவுடன் ஆறாவது அல்லது ஏழாவது முறை ''ஆசமனம்'' கொஞ்சம் பலகாரம் சாப்பிடுவார். உடனே ஐரோப்பிய உடை தரித்துக்கொண்டு கச்சேரிக்குப்போவார். அங்கே பலர் பலவிதமான விண்ணப்பங்கள் கொண்டு கொடுப்பார்கள். அவற்றை யெல்லாம் வாங்கிக் கொள்வார். அதாவது பக்கத்தில் நிற்கும் குமாஸ்தா அவற்றை வாங்கிவைக்கும்போது இவர் பார்த்துக் கொண்டிருப்பார். விண்ணப்பங்கள் வாங்கி முடிந்த பிறகு காகிதங்களில் கையெழுத்துப்போடும் காரியம் தொடங்கும். பழைய

மனுக்கள், திவான் கச்சேரிக் கடிதங்கள், இவற்றின்மேல் தனதிஷ்டப்படியெல்லாம் உத்தரவுகளெழுதி வைத்திருப்பான். அவற்றின் கீழ் வரிசையாகக் கையெழுத்துப் போட்டுக் கொண்டே வர வேண்டும். இன்னின்ன வியவகாரங்களைப் பற்றிய காகிதங்களின்மேல் இன்னின்ன உத்தரவுகள் எழுதப்பட்டிருக்கின்றன என்ற சமாச்சாரமே ''லேகிய''க் கவுண்டருக்குத் தெரியாது.

ஒரு சமயம் வழக்கப்படி உத்தரவுகள் தயார் பண்ணிக் கொண்டு வரும் குமாஸ்தா ஊரிலில்லை. அவன் இடத்திற்கு மற்றொருவன் வந்திருந்தான். ஜமீந்தார் தாமே மனுதார்களுக்கு உத்தரவு எழுதுவாரென்று அவன் நினைத்து மனுக் காகிதங்களை அப்படியே மேஜைமேல் வைத்துவிட்டான். ஜமீந்தாரும் விட்டுக் கொடாதபடி அந்த மனுக்களை ஒவ்வொன்றாகத் திருப்பிப் பார்த்து மேலே உத்தரவுகள் எழுதத் தொடங்கினார்.

கவுண்டபுரத்துக்கு மேற்கே இரண்டு நாழிகை தூரத்திலுள்ள நடுக்கனூர் கிராமத்திலிருந்து வில்வபதிச் செட்டி என்ற ஒரு கிழவன் பின்வருமாறு மனுக் கொடுத்திருந்தான்:

''பிதா மகாராஜா காலத்தில் நான் மிகவும் ஊழியம் செய்திருக்கிறேன். இப்போது பலவிதக் கஷ்டங்களால் நான் ஏழையாய்ப் போய், மக்களையும் சாகக்கொடுத்து விட்டுத் தள்ளாத காலத்தில் சோற்றுக்குச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறேன். மகாராஜா அவர்கள் சமூகத்தில் கிருபை செய்து எனக்கு ஜீவனத்துக்கு ஏதேனும் மனோவர்த்திச் செலவிலே கொடுக்கும்படி பிரார்த்திக்கிறேன்'

இந்த மனுவை ஜமீந்தார் தமது குமாஸ்தாவின் உதவியினால் வாசித்து முடித்துவிட்டுப் பிறகு காகிதத்தின் புறத்திலே அடியிற் கண்டபடி உத்தரவெழுதி விட்டார்.

'தாசில்தார் குமரப்பிள்ளைக்கு—வில்வபதிச் செட்டி பேருக்கு நிலம் விட்டு விடவும்'' இதை எழுதி நீளமாக ராமசாமிக் கவுண்டர் என்று கையெழுத்துப் போட்டுத் தீர்த்து விட்டார்.

இப்படிப் பலவிதமான உத்தரவுகள் பிறப்பித்து ஜமீந்தார் தமது கச்சேரியை முடித்து விட்டார். மறுநாள் இந்த வில்வபதிச் செட்டியின் மனு திவான் கச்சேரிக்கு வந்து சேர்ந்தது. கவுண்டருடைய உத்தரவைத் திவான் படித்துப் பார்த்தார். தாசில்தார் குமரபிள்ளையின் அதிகாரத்துக்குட்பட்ட பூமியில் மேற்படி செட்டிக்கு ஜீவனம்சத்துக்கு நிலம் விட வேண்டுமென்று கவுண்டரவர்களுடைய திருவுள்ளம் ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்து கொண்டார். ஆனால் எவ்வளவு நிலம், எந்த விதமான நிலம், என்ன நிபந்தனைகள்—முதலிய விவரங்களொன்றும் தெரியவில்லை. உத்தரவை அடித்து விட்டுத் திவான் வேறு மாதிரி எழுதிக் கொண்டுவந்து ரகஸ்யமாகக் கவுண்டரின் கையெழுத்து வாங்கிக் கொண்டு போய்விட்டார். கடைசியில் வில்வபதிச் செட்டிக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. உத்தரவிலுள்ள பிழைகளைத் திவான் எடுத்துக் காட்டியபோது ஜமீந்தார் குற்றம்

முழுவதையும் குமாஸ்தாவின் தலையிலே தூக்கிப் போட்டு விட்டார். நான் மனுவை வாசித்துப் பார்க்கவேயில்லை. வேறே பெரிய விவகார மொன்றிலே புத்தியைச் செலுத்திக் கொண்டிருந்தேன். இந்த மனு என்ன விஷயம் என்று குமாஸ்தாவைக் கேட்டேன். 'செட்டி மிகவும் ஏழை; அவனுக்கு உதவி செய்ய வேண்டியதுதான்' என்று குமாஸ்தா சொன்னான். தங்களுடைய அபிப்பிராயந் தெரிந்துதான் சொல்கிறு னென்று நினைத்து உத்தரவெழுதி விட்டேன். மனோவர்த்தியிலே பணத்துக்குத்தான் திண்டாடுதே! அதிலே இந்த இழவையுங் கொண்டுபோய்ச் சேர்ப்பதெப்படி? இதை யோசனை செய்து தான் குமரப்பிள்ளை இலாகாவில் நிலம் விட்டுக் கொடுக்கும்படி எழுதி னேன். எனக்கு அந்த வில்வபதிச் செட்டியைப் போதுமானபடி தெரியும். அவன் சுத்த அயோக்கியப் பயல். பட்டினி கிடந்து செத்தால் சாகட்டுமே! நமக்கென்ன!''

சாயங்காலத்துக் கச்சேரி முடிந்தவுடன் கவுண்டரவர்கள் குதிரை வண்டியிலேறி ஊரைச் சுற்றிச் சவாரி செய்து கொண்டு வருவார். கவுண்ட நகரம், சரித்திரப் பெருமையும், ''க்ஷேத்திர மகாத்மிய மும்'' வாய்ந்த ஊராயினும், அளவில் மிகவும் சிறியது. ஐந்து நிமிஷத் துக்குள் குதிரைவண்டி இதைச் சுற்றி வந்து விடும். இதற்குப் பன்னி ரண்டிடத்தில் ''வாங்கா'' ஊதுவார்கள். இந்த ''வாங்கா'' என்பது பித்தளையில் ஒருவித ஊது வாத்தியம். பறையர் இதனை ஊதிக் கொண்டு ஜமீந்தாரவர்களின் வண்டி முன்னே குடல் தெறிக்க ஓடுவார்கள். சில தினங்களில் பல்லக்கு சவாரி நடக்கும். இன்னும் சில சமயங்களில் ஜமீந்தாரவர்கள் ஆட்டு வண்டியிலே போவதுண்டு. ''ஆட்டுவண்டி'' சவாரிக்கு உதவுமா என்று படிப்பவர்களிலே சிலர் வியப்படையக்கூடும். இரண்டு ஆடுகளைப் பழக்கப்படுத்தி, அவற் றுக்கிணங்க ஒரு சிறு வண்டியிலே பூட்டி, வண்டி, ஆடுகள் இவற் றைச் சேர்த்து நிறுத்தால், அவற்றைக் காட்டிலும் குறைந்த பக்ஷம் நாலு மடங்கு அதிக நிறை கொண்ட ஜமீந்தார் ஏறிக்கொண்டு, தாமே பயமில்லாமல் ஓட்டுவார். குதிரைகள் துஷ்ட ஜந்துக்கள். ஒரு சமயமில்லாவிட்டாலும் ஒரு சமயம் கடிவாளத்தை மீறி ஓடி எங்கே னும் விழ்த்தித் தள்ளிவிடும். ஆடுகளின் விஷயத்தில் அந்த சந்தேக மில்லையல்லவா? இன்னும் சில சமயங்களில் ஜமீந்தார் ஏறு குதிரை சவாரி செய்வார். இவருக்கென்று தனியாக ஒரு சின்னக் குதிரை மட்டம்.—ஆட்டைக் காட்டிலும் கொஞ்சம் பெரிது—தயார் செய்து கொண்டு வருவார்கள். அதன் மேல் இவர் ஏறி உட்கார்ந்தவுடனே அதற்கு முக்கால் வாசி மூச்சு நின்று போகும். பிரச்சினை கொஞ்சம் தான் மிஞ்சியிருக்கும். எனினும் இவருக்குப் பயந் தெளியாது. இவ ருடைய பயத்தை உத்தேசித்தும், குதிரையை எப்படியாவது நகர்த் திக்கொண்டு போக வேண்டு மென்பதை உத்தேசித்தும் முன்னும் பின்னும் பக்கங்களிலுமாக ஏழெட்டு மறவர் நின்று அதைத் தள்ளிக் கொண்டு போவார்கள். ஜமீந்தார் கடிவாளத்தை ஒரு கையிலும் பிராணனை மற்றொரு கையிலும் பிடித்துக் கொண்டு பவனி வருவார். வாங்காச் சத்தத்துக்குக் குறைவிராது. இந்த வியவகாரம் ஒருநாள் நடந்தால், பிறகு மூன்று நான்கு வருஷங்களுக்கு இதை நினைக்க மாட்டார். அதற்கப்பால் மனுஷன் க்ஷத்திரியனல்லவா? பயந்

தெளிந்து பின்னொருமுறை நடக்கும். இவர் இப்படிக் கோழையாக இருப்பதைக் கருதி யாரும் நகைக்கலாகாது. அர்ஜுனனும், வீமனும், அபிமன்யுவும் தோன்றிய சந்திர வம்சத்தில் நேரே பிறந்ததாக இதிகாசங்களிலே கோஷிக்கப்படுகின்ற கவுண்டனூர் ராஜகுலத்தில் இவர் சேர்ந்திருந்தும், இவ்வாறு கொஞ்சம் அதைரியப்படுவதற்குச் சில ஆழ்ந்த காரணங்களுண்டு.

இவருக்குப் புத்திர பாக்கியம் இல்லை. அதற்காகப் பல வித ஹோமங்கள், பூஜைகள், கிரக சாந்திகள், தீர்த்த யாத்திரைகள், யந்திர ஸ்தாபனங்கள் முதலியன செய்துகொண்டு வருகிறார். இந்த அவசரத்திலே குதிரையிலிருந்து தவறி விழுந்து உயிர் போய்விடுமானால் பிறகு இவருடைய சக்ராதிபத்யத்துக்கு ஒரு மகன் பிறக்க இடமே இல்லாமல் போய்விடுமல்லவா? எத்தனை பேர் குதிரையிலிருந்து விழுந்து செத்திருக்கிறார்கள். அதையும் கவனிக்க வேண்டாமா? சில மாதங்களுக்கு முன்புகூட ருஷியா தேசத்தில் ஒரு குதிரைப் பந்தயத்திலே ஒருவன் வேலிதாண்டி விழுந்து உயிர் போய்விட்டதாகச் 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் எழுதியிருந்த விஷயத்தை இவரிடம் யாரோ வந்து சொல்லவில்லையா? நாலு காரியத்தையும் யோசனை செய்துதானே நடக்க வேண்டும். ஒருதரம் போனவுயிர் திரும்பி வருமா? சாயங்காலத்து சவாரி முடிந்தவுடனே கவுண்டரவர்கள் அரண்மனைக்குள் வருவார். நாலைந்து பேராக இருந்து இவருடைய ஐரோப்பிய உடுப்புகளைக் கழற்றி யெறிந்துவிட்டு வேஷ்டி உடுத்துவார்கள். உத்தரீயத்தைத் தாமாகவே வாங்கி மேலே போட்டுக்கொள்வார். மனுஷன் வேலைக்கு மட்டும் பின்வாங்க மாட்டார். அது ஒரு குணம் இவரிடத்தில். பிறகு கைகால் சுத்தி செய்து கொண்டு லேகியம் சாப்பிட்ட பிறகு சாய்வு நாற்காலிக்கு வந்து விடுவார். அப்பால், வெற்றிலை, புகையிலை, ஊர்வம்பு, கதை முதலியன.

இரவு சுமார் பத்து மணியாகும்போது, ஜமீந்தாருக்கு ஒருவாறு புகையிலைச் சாறும் லேகிய வெறியுமாகச் சேர்ந்து தலையை மயக்கி சாய்ந்தபடி, கதை கேட்கக்கூட முடியாதவாறு செய்துவிடும். வம்பு பேசும் "காரியஸ்தர்களுக்கும்," நின்று நின்று காலோய்ந்து போய் விடும். எனவே கவுண்டர் எழுந்து கைகால் சுத்தி செய்வித்துக் கொண்டு, ஸந்தியாவந்தனம் செய்து முடித்து, லேகியம் தின்றுவிட்டு அந்தப்புரத்திலே போய் சாயந்திரப்படி முப்பத்திரண்டு கவளம் சாப்பிட்டு உடனே நித்திரைக்குப் போய்விடுவார். ஜமீந்தாரவர்களுக்கு ஐந்து மனைவிகளுண்டு. ஆனால் ஜமீந்தாரவர்களோ அர்ஜுனனுக்கு நிகரானவர்—விராட நகரத்தில் இருந்த அர்ஜுனனுக்கு—அதாவது, மகாராஜ ராஜ பூஜித மகாராஜ ராஜஸ்ரீ மகாராஜ மார்த்தாண்ட சண்ட பிரசண்ட அண்ட பகிரண்ட கவுண்டாதி கவுண்ட கவுண்ட நகராதிப ராமசாமிக் கவுண்டரவர்கள் பரிபூரண நபும்ஸகனென்று தாத்பரியம். இவருடைய தினசரிக் காரியம் ஒருவாறு சொல்லி முடித்தோம். இன்னும் எவ்வளவோ சொல்ல வேண்டியிருக்கிறது. சந்தர்ப்பம் வாய்க்குமிடத்து அப்போதப்போது சொல்லுகிறோம். இவ்வத்தியாயத்தின் மகுடத்திலே குறிப்பிட்டபடி

இவருடைய சபையைப் பற்றி மாத்திரம் கொஞ்சம் விவரித்துச் சொல்லப் போகிறோம். நம்முடைய கதாநாயகனாகிய சங்கரன் இந்தச் சபையைச் சேர வேண்டியவனாக இருக்கிறபடியால், ராமசாமிக் கவுண்டர் தமிழிலும், சங்கீதத்திலும் வித்வானென்று முன்னமேயேசொல்லியிருக்கிறோம். அவருடைய சபையிலுள்ள பண்டிதர்களுடைய பெயர், இயல், சிறப்பு முதலியவற்றைச் சிறிது விஸ்தரிக்கின்றோம். வித்துவான் அண்ணாத்துரை ஐயர், தர்காலங்கார சர்வசாஸ்திர சாகர உபய வேதாந்தபிரவர்த்தன நிவர்த்தன சம்வர்த்தனகாரியபெருங்குன்றம் கிடாம்பியாச்சான் ஆம்ரோதனசார்யம், முத்தமிழ்ச் சிங்கக்குட்டி முத்துக் கருப்பண பாவலர், தோடி நாராயணையங்கார், முடுகு பல்லவி வேதாசலக் குருக்கள், கம்பராமாயணப் பிரசங்கம் ஆறுமுகக் கவுண்டர், வேலக் கவுண்டர். மூங்கிலருப்பு ராமச்சந்திர பாகவதர், அறுபத்து நாலக்ஷரப் பிச்சாண்டி பாகவதர், பரமபத தூஷணஸ்மத பூஷண, சர்வமத பாஷாண பூர்ண பரமசிவனவர்கள், தொல்காப்பியம் இருளப்ப பிள்ளை, காமரஸ மஞ்சரி சுந்தரய்யர் இவர்களே முக்கிய வித்துவான்கள். இனி சில்லரை வித்துவான்கள் பலருண்டு.

மேலே சொல்லப்பட்ட வித்துவான்களெல்லோரும் புடை சூழ்ந்திருக்க, வானத்துப் புலவர்களுக்கு நடுவே இந்திரன் போலவும் (வானத்து) மீன்களுக்கு நடுவே ஆமை (சந்திரன்) போலவும், இன்னும் எதையெல்லாமோ போலவும், கவுண்டர் கொலுவிற்றிருந்தார்.

அப்போது அடப்பை தூக்கும் தொழிலுடையவனும் ஆனால் முத்தமிழ்ப் புலவர்களுக்குள்ளே, மிகச் சிறந்த வகுப்பில் வைத்து எண்ணத் தக்கவனுமாகிய முத்திருளக் கவுண்டன் வந்து, பின்வருமாறு விண்ணப்பஞ் செய்து கொள்ளலானான்.

''புத்தி'' என்றான் முத்திருளன்.

(ஜமீன்தாரவர்களிடம் வேலையாட்கள் பேசும்போதே 'புத்தி' என்று தொடங்குவது வழக்கம். இந்தச் சொல்லை இதே இடத்தில் இந்த அர்த்தத்தில் வழங்குவதற்குள்ள விசேஷ காரணத்தைக் கண்டு பிடித்துச் சொல்லும்படி தமிழ் நாட்டில் மலிந்து கிடக்கும் பாஷா பரிசோதனைப் பண்டிதர்களிடம் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறேன். நான் யோசனை செய்து பார்த்ததில் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. சிற்சில காரணங்கள் தோன்றுகின்றன; ஆனால் ஒருவேளை சரியாக இருக்குமோ இராதோ என்ற அச்சத்தால் இங்கு வெளியிட மனம் வரவில்லை.

''புத்தி'' என்றான் முத்திருளன்.

''என்ன முத்திருளு, உன் முகத்தைப் பார்த்தால் ஏதோ நல்ல சமாச்சாரம் கொண்டு வந்திருக்கிறதுபோல் தோன்றுகிறது. என்ன, நான் நினைத்தது சரியா, தப்பிதமா?'' என்று ஜமீந்தார் கேட்டார்.

''ஐயோ! அவ்விடத்து ஊகத்திலே ஒரு வார்த்தை சொல்ரது அது தப்பியும் போகிறதா? இது எங்கேயாவது நடக்கிற சங்கதியா? மனுஷ்யாளுடைய நெஞ்சுக்குள்ளிருக்கிற ரகஸ்யத்துக்குள்ளிருக்கிற ரகஸ்யமெல்லாம் மகாராஜாவுடைய புத்திக்கு உள்ளங்கை நெல்லிக் கனி போலவும், கண்ணிலே விழுந்திருக்கும் பூவைப் போலவும் நன்றாகத் தெரிந்து போகுமே! அடியேன் மனசிலிருக்கிறது தெரியாதா?'' என்றான் முத்திருளன்.

கொஞ்சம் தெளிவு குறைந்ததும், தர்க்க சாஸ்திர விதிகளுக்கு இசையாததுமான இந்த ஸ்துதியைக் கேட்டுக் கவுண்டரவர்கள் மிகவும் சந்தோஷமடைந்து, முப்பத்திரண்டு பற்களில் விழுந்தது போக மற்றுள்ள காவி பூத்த பற்களெல்லாம், பெரியவும் சிறியவுமாகிய மாதுளங்கனி விதைகளைப் போலவும், வேறு பல உவமைப் பொருள்களைப் போலவும், வெளியே தோன்றும்படி பலமான மந்த ஹாசம் புரிந்தார். முத்திருளன் மீது பொதுவாக எப்போதுமே ஜமீந்தாரவர்களுக்கு அன்பதிகம். அவன் நெடுநாளைய வேலைக்காரன்; பல தந்திரங்கள் தெரிந்தவன். தவிரவும் பாலியத்தில் ஜமீன்தாரவர்கள் கொஞ்சம் சில்லரை விளையாட்டுக்கள் விளையாடியபோது உடந்தையாக இருந்து பலவித உதவிகள் செய்தவன். இன்னும், இன்னும் காரணங்களுண்டு. ஆனால் பிரபுக்களின் தயவாகிய நதியின் மூலத்தை விசாரிக்கலாகாது.

''முத்திருளா, மற்றவர்களுடைய கவியும் சரி, உன்னுடைய வார்த்தையும் சரி, அவர்களுடைய கவி கேட்பதிலுள்ள சுகம் உன் பேச்சிலே யிருக்கிறது'' என்று ஜமீன்தார் தனது வேலைக்காரனை மெச்சினார். அவன் தம்மைப் புகழ்ந்து பேசியதற்கு வெகுமதியாகச் சபையிலிருந்த புலவர்களுக்கெல்லாம் அடிவயிற்றிலே எரிச்சல் உண்டாயிற்று. இது முத்திருளக் கவுண்டனுக்குத் தெரியும். ஜமீந்தாருக்குக்கூட ஒருவேளை தெரிந்திருக்கலாம். அப்படியிருந்தும் அவர்களெல்லோரும் தமது எரிச்சலை உள்ளே அடக்கிக் கொண்டு வெளிப்படையாக ஜமீந்தாருடைய கருத்தை ஆமோதித்துப் பேசினார்கள். உபய வேதாந்த ஆ...சாரியர், ''ஆமாம், மகாராஜா! ஸம்கிருதத்திலே பாணகவியைப் போல நம்முடைய முத்திருளக் கவுண்டன். அவர் தமது காதம்பரியை வசனநடையிலேதான் எழுதியிருக்கிறார். அப்படியிருந்தும், பாட்டாகச் செய்யப்பட்டிருக்கும் எத்தனையோ காவியங்களைக் காட்டிலும் அதைப் பெரியோர்கள் மேலானதாக சொல்லியிருக்கிறார்கள். ஆனால் பாணகவி உட்கார்ந்து புஸ்தகமாக எழுதினார். நமது முத்திருளக் கவுண்டன் சிரமமில்லாமலே பேசுகிற பாவனையில் அத்தனை பெரிய திறமை காட்டுகிறான். இவனை வசன நடையில் ஆசு கவி என்று சொல்லலாம்'' என்று திருவாய் மொழிந்தருளினார்.

உடனே, முத்திருளன் அவரை விரஸத்துடன் நோக்கி, 'செய்யுளும் நமக்குப் பாடத் தெரியும். சாமி! ஏதோ வாயினால் சும்மா உளறிக் கொண்டிருப்பான். பாட்டுப் பாடத் தெரியாதவன் என்று நினைத்துவிட வேண்டாம்'' என்றான். தனக்குக் கவிபாடத் தெரியுமென்பதையும், அவருக்கு அத்தொழில் தெரியாதது பற்றித் தனக்கு

